


நகரத்தார்

# இதழ்

## தீபாவளி சிறப்பு இதழ்



## சமூக மாத இதழ்

ஆசிரியர் :

சுப. செந்தமிழன்

ஓம்

தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்

தமிழ் அன்னைக்கு வணக்கம்

செய்யும் தொழிலே தெய்வம்

# நகரத்தார் இதழ்

(தீபாவளி சிறப்பிதழ்)


மலர் : 5 ஐப்பசி-1991 இதழ் : 5





ஆசிரியர் :

சுப. செந்தமிழன்

5, யானைக்காரச் சந்து

மீனாட்சி அம்மன் கோவில் தெரு

மதுரை-625 001




தமிழ் நாடே வாழ்க-எம்
தாய் நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தழையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க

புரட்சிக்கவிஞர்
பாரதிதாசனார்

நம் நாட்டின்

# முதல் பெண் மாத இதழ் ஆசிரியர்

"ஆண்களால் அடிமைப்படுத்தபட்டிருக்க எந்த பெண்ணும் சுயமரியாதையற்றவள் அல்ல!"

— சுவரண்குமாரிதேவி

சுவரண்குமாரி தேவி தான் இந்தியாவின் முதல் பெண் பத்திரிகை ஆசிரியர். அந்த இதழின் பெயர் 'பாரதி" 1886-ம் ஆண்டு வங்கத்திலிருந்து வெளி வந்தது.

சுவரண்குமாரி வங்கத்தில் தாகூர் குடும்பத்தில் பிறந்தவர். பதினோராவது வயதில் அவருக்கு திருமணம் நடைபெற்றது. இவர் ஒரு புரட்சி வீராங்கனையாக இருந்தார்.

"பெண்களே! அடுப்படி மட்டும் நமக்குச் சொந்தமான இடம் அல்ல. வேறு பல பணிகளும் நமக்கு உள்ளன வாருங்கள் என்று பெண்களுக்கு அழைப்பு விடுத்தார். அவரது கணவர் அவரது பணிக்கு ஆதரவு தந்தார். சுவரண்குமாரி பாரதியில் கட்டுரைகள் கதைகள், கவிதைகள், நகைச்சுவை கட்டுரைகள், விஞ்ஞானச் செய்திகளை சுவைப்பட எழுதினார். சுவரண்குமாரி கல்லூரிக்கு சென்றவர் அல்ல! அனுபவமே அவர் பெற்ற பாடங்கள் பெண்களுக்கு எல்லாம் அவர் ஒரு வழிகாட்டி.

— இராசகுமாரி செந்தமிழன்

# நம்மால் முடியும்

நாம் நினைத்தால் உயரிய நோக்கங்களுடனும் ஆர்வத்துடனும் துடிப்புடனும் செயல்பட்டால் நாம் முன்னேறமுடியும் நாம் எல்லோரும் முன்புபோல் செல்வந்தர்களாக முடியும்.

நம் இந்தியாவில் சிறிய இனம். நம்மால் இந்தியாவில் உயர் பதவியை பெறமுடியுமா? என்று எண்ணாமல் நம்மால் முடியும் என்று எண்ணத்தில் செயல்பட்டால் நம்மவரும் இந்தியாவின் உயர் பதவிகளை பெற முடியும். அவ்வாறு பெற்றால்தான் நமது இனம் உயர்வுபெறும் இல்லையென்றால் என்ன தீர்மானங்கள் போட்டாலும் எத்தனை விண்ணப்பங்கள் கொடுத்தாலும் பயன் இருக்காது. மக்கள் அன்பும், உயரிய எண்ணமும் இருந்தால் எதையும் எளிதில் அடைய முடியும்.

நமக்கு வேலை வாய்ப்பிலும், கல்வியிலும் இழைக்கப்படும் அநீதியை எடுதத்துக்கூறி நீதி பெற்ற நம்மவர்கள் நாடாளுமன்றத்திற்கு செல்வது அவசியமாகும் நமது குரல் சட்டமன்றத்தில் மட்டுமில்லை. நாடாளுமன்றத்திலும் ஒலிக்கவேண்டும். சிறிய இனமான யூத இனம் இன்று உலகில் புகழ் பெற்ற இனமாக இருப்பதுபோல் நமது இனமும் புகழ் பெற வேண்டும் அதை செய்ய நம்மால்முடியும் இதை உறுதியாக நான் கூறக்காரணம் நமது முன் வரலாறு ஆகும்.

---

❋ வாசகர்களுக்கும், தீபாவளி இதழுக்கு விளம்பரம் தந்து ஆதரவு தந்த அன்பர்களுக்கும் தீபாவளி வாழ்த்துக்கள்

— சுப. செந்தமிழன்

---

# "யாதும் ஊரே யாவரும் கேளீர்"

கனியன் பூங்குன்றனார்

தமிழண்ணல்

"யாதும் ஊரே யாவரும் கேளீர்" இப்பாட்டு கனியன் பூங்குன்றனார் பாட்டாகும். இப்பாட்டிற்கு "எல்லாம் நம் ஊரே, யாவரும் நம் உறவினரே" என்பது பொருள். இதில் கேளீர், என்பதற்கு உறவினர் என்று பொருளிருப்பதைத்தெரிந்து கொள்ளாதவர்கள் எல்லோரும் கேளுங்கள், என்று பொருள் கொண்டு நன்றாகக் கேட்க வேண்டும் என்பதற்காக 'கேளீர்' என்று நீட்டி விடுகிறார்கள் கேளீர் என்பது நெருங்கிய உறவினரையே குறிக்கும். கணவனைக் கேள்வன் என்று குறிப்பதுண்டு கிளை விடுவது போன்ற மிக ஒட்டிய உறவே கேள் கேளிர் எனப்பட்டது

---

# நர்மதை நதி

அரு. சோமசுந்தரனார்

மத்தியபிரதேசத்தில் ஜபல்பூர் என்ற பெரிய நகரம் உள்ளது. இங்கே உள்ள நர்மதை நதிக்கரையின் தென் கரையில் இராமர் கோவில் உள்ளது. இங்குள்ள ஒவ்வொரு வீட்டிலும் பீடத்தின் மீது சிவலிங்கம் உள்ளது. இந்த சிவலிங்கங்கள் நர்மதை நதியில் நீராடும் பொழுது நர்மதை அன்னை எங்களுக்கு தந்த அன்பளிப்பு என்று அவ்வூர் மக்கள் கூறுகின்றனர். நர்மதை நதியில் சிவலிங்கங்கள் கிடைக்கின்றது.

# கேபிள் டி.வி.

செந்தில்அரசன்—சோழபுரம்

விரைந்து வளர்ந்து வரும் உலகத்தில் விஞ்ஞானமும் வேகமாக வளர்ந்து வருகின்றது. நேற்று வரை திரைஉலகின் அரசர்களாக இருந்தவர்கள் இன்று நாட்டின் அரசர்களாக உள்ளனர். இதற்கு காரணம் மக்களின் மனதை விரைந்து கவரும் சக்தி திரைப்படங்களுக்கு உள்ளது, மக்கள் மிக விரும்பி திரையரங்குகளுக்கு சென்று பார்க்கும் திரைப்படங்கள் இன்று கேபிள் டி.வி மூலம் வீடுகள் நோக்கி வந்துவிட்டது கேபிள் டி.வி. பற்றி சில செய்திகளை கீழே தந்துள்ளேன்.

1. தமிழ் நாட்டில் கேபிள் டி.வி வழக்கத்திற்கு வந்து பத்து ஆண்டுகளுக்கு மேல் ஆகின்றது

2. தமிழகத்தில் கேபிள் டி வி வந்த முதல் ஊர் பெரியார் மாவட்டத்திலுள்ள ஈரோடு.

3. மதுரை, திருச்சி ஆகிய ஊர்களில் கேபிள் டி வியில் இரண்டு சேனல்கள் உண்டு.

4. மதுரையில் ரூ 150/- கட்டிவிட்டால் கேபிள் டி.வி. நமது வீடு நோக்கி வந்துவிடும். நாள் ஒன்றுக்கு இரண்டு படங்கள் வீதம் குறைந்தது 50 படங்கள் பார்க்கலாம் மாதம் நம் அதற்கு கட்ட வேண்டியது ரூ 50 தான் ஆகும்.

5. கேபிள் டி.வியில் திரைப்படங்கள் ம்ட்டுமில்லாது கார்டுன் விளையாட்டுப் போட்டிகளும் போடப்படுகின்றது.

6. சென்னை மாநகரில் கேபிள் டி வி வேகமாக பரவி வருகின்றது.

7. கேபிள் டி.வி கொண்டு வரத் தேவையானது வெள்ளை நிற கேபிள் வயர்கள் அரைக்கால் அங்குலம் சுற்றளவுள்ள இந்த வயரின் விலை அடி ஒன்றுக்கு ரூ. 6/- ஆகும்.

# "யாதும் ஊரே யாவரும் கேளீர்"

கனியன் பூங்குன்றனார்

தமிழண்ணல்

"யாதும் ஊரே யாவரும் கேளீர்" இப்பாட்டு கனியன் பூங்குன்றனார் பாட்டாகும். இப்பாட்டிற்கு "எல்லாம் நம் ஊரே, யாவரும் நம் உறவினரே " என்பது பொருள். இதில் கேளீர், என்பதற்கு உறவினர் என்று பொருளிருப்பதைத்தெரிந்து கொள்ளாதவர்கள் எல்லோரும் கேளுங்கள், என்று பொருள் கொண்டு நன்றாகக் கேட்க வேண்டும் என்பதற்காக 'கேளீர்' என்று நீட்டி விடுகிறார்கள் கேளீர் என்பது நெருங்கிய உறவினரையே குறிக்கும். கணவனைக் கேள்வன் என்று குறிப்பதுண்டு கிளை விடுவது போன்ற மிக ஒட்டிய உறவே கேள் கேளிர் எனப்பட்டது

---

# நர்மதை நதி

அரு. சோமசுந்தரனார்

மத்தியபிரதேசத்தில் ஜபல்பூர் என்ற பெரிய நகரம் உள்ளது. இங்கே உள்ள நர்மதை நதிக்கரையின் தென் கரையில் இராமர் கோவில் உள்ளது. இங்குள்ள ஒவ்வொரு வீட்டிலும் பீடத்தின் மீது சிவலிங்கம் உள்ளது. இந்த சிவலிங்கங்கள் நர்மதை நதியில் நீராடும் பொழுது நர்மதை அன்னை எங்களுக்கு தந்த அன்பளிப்பு என்று அவ்வூர் மக்கள் கூறுகின்றனர். நர்மதை நதியில் சிவலிங்கங்கள் கிடைக்கின்றது.

# புதிய ஆடைகள்

''பட்டினும் மயிரினும் பருத்தி
நூலினும் கட்டு நூண் வினை''

— *சிலப்பதிகாரம்*

1) சிலப்பதிகார காலத்தில் பட்டில் 36 வகைகள் இருந்தன.

2) கூரை என்பது ஆடையை குறிக்கும். கூறை நெய்வோர் மிகுந்த ஊர், கூறை நாடு. இன்று கூறை நாடு கொரநாடு என்று அழைக்கப்படுகின்றது.

3) இக்காலத்தில் சட்டை எனப்படுவது அக்காலத்தில் படம் எனக் கூறப்பட்டது என்று பட்டினத்துப் பாலை கூறுகின்றது.

4) காவிரிப் பூம்பட்டினத்தில் பகற் காலத்தில் மகளிர் பட்டுடை உடுத்தினர் என்றும், இராக் காலத்தில் பருத்தி ஆடை உடுத்தினார் என்றும் தமிழ் இலக்கியம் கூறுகின்றது.

5) நமது நாட்டில் உருவாகும் துணி வகையில் 30% கைத்தறி துணிகளாகும்.

6) லினன் துணி ஒரு வகை நார் செடியிலிருந்து தயாரிக்கப்-படுகின்றது.

7) பேனியன் என்பதே பனியனின் முதல் பெயர் பனியன் இனத்-தவர் அணிந்து வந்த சட்டை தான் பனியன் ஆனது.

8) மதுரையில் 300 ஆண்டுகளுக்கு முன்னால் சுங்கடி சேலை தயாரிக்கும் பணி தொடங்கியது. சுருக்கம் பிடித்து நூல் கட்டு தலால் சுங்கடி சேலை எனப் பெயர் பெற்றது. ஒரு சேலை பிடிக்ககுறைந்தது 2 நாள் ஆகும். ஒரு சேலை தயாரிக்க குறைந்தது ரு 18 ஆகும். கூடுதல் செலவு ரூ 50 ஆகும்.

9) காக்கி என்பது உருது சொல் காக்கி என்றால் புழுதி என்று பெயர்.

# வாசகர் எண்ணங்கள்

புரட்டாசி இதழ் கண்டேன்
புதுமை அருமை!
பூத்தது பெருமை!
பெருமை படைத்த பெண்மை
கட்டுரை அருமை!

கவிதைத் தென்றல்
கரு. கருப்பையா B Sc M A. MPHIL., B.ED.
திருப்புவனம்

---

2. புரட்டாசி இதழ் மிகச் சிறப்பாக இருந்தது கன்னியருக்கு வாழ்வு கொடுங்கள் மிக நன்றாக இருந்தது தொடர்ந்து இது போல் எழுதுங்கள்.

பழ. ராமனாதன்
387/P, பாப்பாட்டித் தெரு
தஞ்சாவூர்

---

3. புரட்டாசி இதழில் கவிதைத் தென்றல் கரு கருப்பையா அவர்களின் புது வசந்தம் நீ தானோ! தாலாட்டைப் பார்த்தேன். படித்தேன் ரசித்தேன். சிறப்பாக இருந்தது.

சே முத்தையா
பெரிய கடை வீதி
கல்லல்

---

4. தித்திக்கும் தேனமுதாய் பொழிகின்ற உங்கள் வாய் சொற்களுக்கும் எழுத்து திறனுக்கும் நான் அடிமையாகி விட்டேன். சிரிப்புகளையும் சேர்க்க வேண்டியது,

இராம சண்முகம்
171-A தெற்கு வெளி வீதி, – மதுரை

---

5) தங்களின் ஆடி இதழில் கவியரசு கண்ணதாசன் தோற்றம் 24—06—19 அன்று மறைவு 17—10—1981 என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவறாகும். கண்ணதாசன் தோற்றம் 24—06—1927 ஆகும். அதே இதழில் தூத்துக்குடி மதுரை-யிலிருந்து 90 கி.மீ. தொலைவு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தொலைவு தூரம் 130 கிலோ மீட்டர் இது போன்று குறைகள் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டியது.

அரு. அ. சு. செல்லையா செட்டியார்
7, சித்திரக்காரத் தெரு
மதுரை-1

---

6) திருமணத்திற்கு தயாரித்து வைக்க வேண்டிய பொருள்களையும், சில விளக்கங்களையும் வெளியிட்டது பயன்மிக்கது. கா இராமநாதனின் சமுதாய நலப்படை வரவேற்க வேண்டியது. முடிந்தால் அவர் முயற்சியில் இறங்கட்டும். அதற்கு நாங்கள் ஆதரவு தருகின்றோம்.

S வள்ளியப்பன்
தேவகோட்டை

---

7) ஐந்து ஆண்டுகளாக தனி ஒரு நபராக தொடர்ந்து இதழை வெளியிட்டும் வரும் தங்களை சாதனையாளர் என்று பாராட்டுகின்றேன்.

கா. இராமநாதன்
7A, தொழிற்பேட்டை
அம்பத்தூர்

---

# ஓரியண்ட் மருத்துவமனையுடன் இணைந்த ஓரியண்ட் நல்வாழ்வுக்கழகம்

*சிலசெய்திகள் — மதுரை*

இயற்கை சூழ்நிலைகளுடன் கூடிய எழில்மிக்க மருத்துவமனை ஓரியண்ட் மருத்துவமனை. கனிவான, வரவேற்பு இனிமையான பேச்சு, அன்பு நிறைந்த பணி, இவையே மென்மையும், இனிய தன்மையும் மிக்க டாக்டர் S. V. பெத்தபெருமாள் அவர்களை நிர்வாக இயக்குநராக கொண்டு இயங்கும் ஓரியண்ட் மருத்துவமனை.

இந்த மருத்துவமனை வாழ்க்கை நலத்திற்கு பாதுகாப்பான திட்டத்தை, மக்கள் நலத்திட்டத்தை வகுத்து தந்துள்ளது. இத்திட்டத்தில் பங்கு கொள்பவர்களுக்கு இத்திட்டம் இலவச மருத்துவ வசதி வழங்குகின்றது.

1. கணவன், மனைவி இருவருக்குமான இணைந்த ஒரு இன்சூரன்ஸ் பாலிசியை இலவசமாக வழங்குகின்றது. இந்த பாலிசியின் விதிமுறைகளுக்கு உட்பட்ட எல்லா மருத்துவ பணிகளும் பெறலாம். மருத்துவச் செலவை இன்சூரன்ஸ் கம்பெனியார் மருத்துவமனைக்கு வழங்குகிடுவார்.

2. இதற்கு உட்படாத மருத்துவ ஆலோசனைகள், மருந்துவகைகள் பரிசோதனைகள் ஆகிய எல்லா பணிகளுக்கும் இன்சூரன்ஸ் பிரிமியம் உள்பட ஆண்டிற்கு ரூ. 2000/- வரை இலவசமாக பெறலாம்.

3. இந்தத் திட்டத்தில் சேராதவர்கள் மருத்துவமனை வழங்குகின்ற பணிகளை பெறாதிருந்தால் கணவன் மனைவி இருவருக்கும் இலவச முழுமையான உடல் நல பரிசோதனை செய்து தருகின்றது.

*வைப்புநிதி*

வாழ்நாள் முழுமைக்கும் நீங்கள் வழங்கும் வைப்புநிதி ரூ. 10,000 மட்டுமேயாகும் நீங்கள் விருப்பினால் ஒரு ஆண்டு இறுதியில் இப்பணத்தை திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

வருமானவரி கட்டுகிறவர்களுக்கு இன்சூரன்ஸ் பிரிமியம் கூடுகின்ற தொகைக்கு வரிவிலக்கு உண்டு. இன்சூரன்ஸ் பிரிமியம் ரசீது உறுப்பினர்களுக்கு வழங்கப்படும்.

மருத்துவமனையில் சேர்க்கவேண்டிய நிலையில் உறுப்பினர் நோய்வாய்ப்பட்டால் இன்சூரன்ஸ் மூலமாக ரூ. 16,000 வரை கணவனுக்கும், ரூ. 16,000 வரை மனைவிக்கும் மருத்துவ வசதியை மருத்துவமனை பெற்றுத் தருகின்றது.

சுருக்கமாகச் சொன்னால் இத்திட்டத்தில் பங்கு கொள்ளும் குடும்பத்தினருக்கு முழுமையான மருத்துவ பாதுகாப்பு கிடைக்கின்றது. உங்களுடைய முதலீடு திரும்பப் பெறக் கூடியது வைப்பு நிதி ரூ. 10,000 மட்டுமேயாகும்.

### நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்

ஓரியண்ட் மருத்துவமனைக்குச் சென்று உடல் நலம் பேணி நோய்வராமல் தடுத்துக் கொள்ள ஓரியண்ட் நல்வாழ்வுக்கழகம் பெரிதும் உதவிசெய்யும்.

<u>முகவரி</u>

லேக் வியூ ரோடு
கே. கே. நகர்
**மதுரை-625 020.**

Phone:
45892, 45893, 45899

### தள்ளி நில்

1. தாயிடம் பேசும் போது இரண்டடி தள்ளி நில்
2. தந்தையிடம் பேசும் போது ஐந்தடி தள்ளி நில்
3. தன் உடன் பிறப்பிடம் பேசும்போது எட்டடி தள்ளி நில்
4. குருவிடம் பேசும் போது மூன்றடி தள்ளி நில்
5. பகைவனிடம் பேசும் போது பத்தடி தள்ளி நில்
6. துரோகியிடம் பேசுவதற்கு நிற்காதே

— விநோதினி

---

ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணி நேரம்
ஒரு ஆண்டுக்கு 8760 மணி நேரம்



# திரை உலகம்

# SRI RAM FILMS

## N. S. சொக்கலிங்கம் அவர்களுடன் நேர்உரையாடல்

இளைய சமுதாயத்திற்கு பெருமைகள் சேர்ப்பவர் இனிய குணத்தை தன்னுடன் கொண்டவர். சுறு சுறுப்புக்கு அவர் நண்பர் வெற்றி வாழ்க்கைக்கு இவர் ஓர் வழிகாட்டி. இவரை நேரடியாக நான் பேட்டிக் காண அவரது நிறுவனத்திற்கு சென்ற பொழுது அவர் அங்கு இல்லை. நான் எழுதிச் சென்ற வினாக்களை அங்கே கொடுத்து விட்டு வந்தேன், அதற்குரிய பதிலை அவர் எழுதி எமக்கு அனுப்பி வைத்தார். பேட்டி எடுக்க வருபவர்களை பல தடவைகள் அலைய விடாமல் பதிலுக்கு உடன் பதில் தரும். உயரிய குணம் மிக்க லேனா தமிழ்வாணன் போல் NS. சொக்கலிங்கம் அவர்களும் பாராட்டுக்குரியவர். இவர் காரைக்குடி திரு. கைலாசம் செட்டியார் திருமதி. ஞானம்மாள் ஆச்சி அவர்களின் செல்வர் இளையாத்தங்குடி கழனி வாசல் பிரிவைச் சார்ந்தவர். தற்போது மதுரை இராமநாதபுரம் மாவட்ட விநியோகக் கழகத் தலைவராக உள்ளார். அவர் நான் கேட்ட கேள்விகளுக்கு தந்துள்ள பதில்களை கீழே தந்துள்ளேன்.

வினா : ஸ்ரீ ராம் பிலிம்ஸ் எந்த ஆண்டு தொடங்கப்பட்டது. எத்தனைப் படங்களை வெளியிட்டுள்ளீர்கள்?

பதில் : 1977ம் வருடம் தொடங்கப்பட்டது சுமார் 100 படங்கள் கைவசம் உள்ளது

வினா : இன்றைய திரை உலகின் வசூல் மன்னர் யார்?

பதில் : நடிகர்களில் "சூப்பர் ஸ்டார்" ரஜனிகாந்த் இயக்குநர்களில் P. வாசு

வினா : இன்று திரை உலகம் அரசியல் உலகை தனது கீழ் கொண்டு வந்துள்ளது. ஆடம்பரமாக வாழ்ந்த, வாழும் நடிகர்கள், நடிகைகள் மக்களது உள்ளங்கள் உணர்ந்து செயல்படுவார்களா?

பதில் : இன்றைய அரசு அறிவிக்கும் திட்டங்கள் மூலம் கலை உலக முதல்வர் மக்களின் உள்ளங்களை புரிந்து கொண்டிருக்கிறார் என்று தானே தெரிகின்றது.

வினா ; கேபிள் டிவியால் திரை அரங்குகள் வசூல் பாதிக்கப்படும் என்று நினைக்கின்றீர்களா?

பதில் : நிச்சயமாக எல்லா செண்டர்களிலும் வசூல் மிகவும் பாதிக்கின்றது.

வினா : மதுரையில் நமது படக் கம்பெனிகள் எத்தனை உள்ளன?

பதில் : சுமார் 400க்கு மேற்பட்ட படக்கம்பெனிகள் உள்ளன.

வினா : இன்றைய கவிஞர்களுக்கும் கவியரசு கண்ணதாசனுக்கும் நீங்கள் காணும் வேறுபாடு என்ன?

பதில் : காசுக்காக பாடல் எழுத வேண்டும் என்பது இன்றைய கவிஞர்களின் நிலையாகும். கொள்கைக்கு பாடல் எழுதியது அன்றைய கவியரசுவின் சிறப்பு ஆகும்.

வினா : அன்று திரை உலகில் அழகும் திறமையும் மிக்கவர்களே நடிகர்களாக வர முடிந்தது. இன்று நினைத்தவர்கள் எல்லாம் நடிகர்கள் ஆகின்றார்கள். இதுபற்றி தங்கள் கருத்து என்ன?

பதில் : கரடு முரடான கல்லையும், கலை நயத்தோடு சிற்பி செதுக்கி கலையாக்கித் தருகின்றான். அழகு இல்லாவிட்டாலும் ஒருவனின் திறமையை வெளிக் கொணரும் ஆற்றல் மிக்க இயக்குநர்கள் இன்று அதிகம் இருக்கின்றார்கள் என்பதற்கு தங்களின் கேள்வியே ஒரு சான்று.

வினா : ஒரு சில படங்களில் கதை, பாடல், இசை, இயக்கம் எல்லாவற்றையும் ஒருவரே மேற்கொள்கின்றார். இது சரியான நடைமுறையா?

பதில் : சிலருக்கு இணங்கிபொருத்தமாகஅமைகின்றது. உதாரணமாக ''சகலகலா வல்லவன்'' T. ராஜேந்தரையும் பல்கலை மன்னர் பாக்யராஜுவையும் குறிப்பிடலாம்.

வினா : உங்களிடம் நமது இளைஞர்கள் எத்தனை பேர் பணியாற்றுகின்றனர். ?

பதில் : சுமார் 20 பேர்கள் பணிபுரிகின்றனர்.

வினா : அன்றைய திரைப் பாடல்கள் மென்மையாகவும், இனிமையாகவும் இருந்ததுயென்றும் தற்பொழுது வரும் பாடல்கள் அவ்வாறு இல்லையென்றும் கூறப்படுவது பற்றி தங்கள் கருத்து என்ன?

பதில் : அன்று பாடல் எழுதி இசையமைத்தார்கள் இன்று இசைக்காக பாடல் எழுதுகின்றார்கள்.

திரையுலகில் பல படங்களுக்கு தயாரிப்பு நிருவாகியாக பணி புரிந்து பின்திரைப்பட விநியோகக் கம்பெனி தொடங்கி பல வெற்றிப் படங்களை வெளியிட்டு இன்று மதுரை - ராமநாதபுரம் பிலிம் டிஸ்டிரிபியூட்டர்ஸ் தலைவராக உள்ள N S. சொக்கலிங்கம் அவர்கள் மேலும் பல வெற்றிகளைப் பெற எமது வாழ்த்துக்கள்.

— சுப செந்தமிழன்

---

# வெற்றிச் சிந்தனைகள்

பேராசிரியர் — ச. மெய்யப்பனார்

எந்த மருந்து சீரணம் தரும்? உடற்பயிற்சி
எந்த மருந்து பலம் தரும்? உறக்கம்
எந்த மருந்து குணப்படுத்த முடியாத நோய்களின் துன்பங்களைக் குறைக்கும்? பொறுமை — வால்டேர்

இளைஞர் பின்பற்றவேண்டிய சிறந்த விதிகள்?
குறைந்த பேச்சு, நிறைந்த கேள்வி, தனித்து சிந்தனை
கருத்தில் தெளிவு, பிறர் கருத்தில் மதிப்பு — டெம்பிள்

சிந்தையை சிறிய எண்ணங்களில் உழலவிடுவோர்.
சாதாரணமாகப் பெரிய செயல்களைச் செய்ய சக்தி பெறார்
— ரோஷிவக்கல்டு

---

ஆன்மீகம்

# கல்லும் கடவுளும்

பொற்கிழிக்கவிஞர்
சொ. சொ. மீ. சுந்தரனார்

ஒரு கைதேர்ந்த சிற்பி கருங்கல்லில் நாயொன்றைச் செய்து முடித்து விட்டான். அது சிற்பமாகத் தெரியவில்லை. உண்மையாகவே அந்த நாய் நம்மீது பாய்வது போல் தோன்றுகிறது. உயிரும் உணர்வும் இல்லாவிட்டாலும் உருவம் சிறப்பாக இருக்கிறது. தெருவில் சென்றவர்களில் ஒருவன் இந்த நாய்ச் சிற்பத்தைப் பார்த்தான். "அழகான நாய்! இப்படி ஒரு நாயை எங்குமே கண்டதில்லை" என்று புகழ்ந்தான் இன்னொருவன் பார்த்து விட்டு "நல்ல கருங்கல். இத்தகைய வழவழப்பான கல்லை இந்தச் சிற்பி எங்கே கண்டெடுத்தானோ?" என்று வியந்தான். முதலாமவன் கண்களில் நாய் பட்டது. கல் தெரியவில்லை. இரண்டாமவன் கண்களில் கல் பட்டது நாய் தெரியவில்லை. கல்லைக் கண்ட கண்கள் நாயைக் காணவில்லை. நாயைக் கண்ட கண்களில் கல் படவில்லை. ஆமாம். நாயைக் கண்டால் கல்லைக் காணோம் கல்லைக் கண்டால் நாயைக் காணோம் இவற்றுள் எது சரி? இரண்டுமே சரிதான்.

வேறொரு பக்கத்தில் மரத்திலே யானை பொம்மை செய்தான் ஒரு மரத்தச்சன். தேக்கு மரமும் சிறப்பானது. சின்ன யானையும் அழகானது இதைப் பார்த்தவர்கள் இருவர். அவர்களில் ஒருவன் "யானை அழகாயிருக்கிறது" என்றான் மற்றொருவன் "தேக்குமரம் சிறப்பாக இருக்கிறது" என்றான். மரத்தின் அழகைப் பார்த்தவனுக்கு யானை மறைந்து விட்டது யானையின் அழகைக் கண்டவனுக்கு மரம் மறைந்து விட்டது திருமுறை ஆசிரியர்களில் சாத்திரமும் தோத்திரமுமான திருமந்திரத்தை எழுதிய திருமூலர் இதைக் கண்டார்.

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை

என்று பாடினார். இது எப்படி இருக்கிறது? ஆண்டவன் உலகத்துக்குள், மறைந்திருக்கிறான். உலகமும் ஆண்டவனுக்குள் மறைந்துள்ளது. உலகத்தையே பார்த்தவன் கண்களில் ஆண்டவன் மறைந்தான் ஆண்டவனையே பார்த்த கண்களுக்கு உலகம்மறைந்தது

பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்.

என்ற அடிகள் தொடர்ந்தன. ஐம்பூதங்களும் ஆண்டவனாகிய பரத்தை மறைத்தன. அவையே அந்த ஆண்டவனுக்குள் மறைந்தன. கடவுள் என்றாலே கடந்தும் இருப்பவன், உள்ளேயும் இருப்பவன் என்று பொருள். எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பரத்தினுள் பார் முதலிய பூதங்கள் மறைந்தன. எல்லாவற்றின் உள்ளும் இருக்கும் பரம்பொருளைப் பூதங்கள் மறைத்தன.

கல்லிலே கலைவண்ணம் கண்டவன் தமிழன். அவன் வடித்த முருகன் கல்லில் கடவுளைக் காட்டுகிறான் இந்த முருகனைச் சிற்பி எப்படிச் செதுக்கினான்? ஒரு கல்லைக் கொண்டு வந்தான். அந்தக் கல்லுக்குள் தான் இந்த முருகன் இருந்திருக்கிறான். முருகனைச் சுற்றித் தேவையில்லாத கல்லின் பகுதிகள் இருந்தன. சிற்றுளியால் சிற்பி, தேவையற்ற பகுதியைச் செதுக்கித் தள்ளிவிட்டான் இப்பொழுது முருகன் வெளிப்பட்டுத் தோன்றுகிறான். நம் நெஞ்சக்கல்லிலும் முருகன் தோன்றுவான். நாம் மனத்தைக் கட்டுப்படுத்திச் சினத்தை வென்று, தானங்கள் செய்து இருந்தபடி இருந்தால் முருகன் வெளிப்படுவான்.

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோள் இருந்த படியிருங் கோள் எழு பாரும் உய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றம் திறக்கத் துளைக்கவை வேல்
விடுங்கோன் அருள்வந்து தானே உமக்கு வெளிப்படுமே.

என்பது கந்தரலங்காரம். கல்லுக்குள் இருந்த கடவுள், தேவையற்ற பகுதிகளைச் செதுக்கியதும் வெளிப்படுவது போலே, நம் நெஞ்சுக்குள் இருக்கும் முருகன், தேவையற்ற கோபம், பொறுமை, காமம் ஆகியவற்றை விலக்கினால் தானே வெளிப்படுவான்.

தேவையற்றவைகளை விலக்கியவனுக்குத் தான் கல்லில் கடவுள் தோன்றுவார். விலக்காதவனுக்குத் கடவுளும் கல்லாகிறார். படகு தண்ணீருக்குள் இருக்கலாம். தண்ணீர் படகுக்குள் போகக்கூடாது. நாம் உலகத்தில் இருக்கலாம். உலகப்பற்று நமக்குள் போய்விடக் கூடாது. தண்ணீரிலேயே கிடக்கும் தாமரையில் தண்ணீர் எட்டாதது போல உலகத்திலேயே இருந்தாலும் நம் மீது உலகப்பற்று எட்டாமல் பற்றின்றிக் கடமைகளைச் செய்தால் கல்லிலும் கடவுளை உணரலாம். கண்ணிலே அன்பிருந்தால் கல்லிலும் தெய்வம் வரும். நம்பின பேருக்கு நடராஜா என்றபடி வழிபாட்டின் ஆற்றலால் கல்லிலும் கடவுளைக் காண்போமாக!

## தொழில்

# முருகப்பா நிறுவனங்கள்

(சென்னை)

அ. மு. மு. அருணாசலம் செட்டியார்



இன்று நகரத்தாருக்கு பெருமை தேடித் தருவது நாட்டின் தொழில் வளத்துக்கு முன்னோடியாக இருப்பது முருகப்பா நிறுவனங்கள்.

இந்த நிறுவ்னங்களுக்கு வித்திட்டவர்கள் தொழில் மேதைகள் திவான் பகதூர் ஏ. எம். எம். முருகப்பா செட்டியார் அவர்கள். ஏ எம். எம். அருணாசலம் செட்டியார் அவர்கள்.

**கார்பொரண்டம் யூனிவர்சல்**

திருவொற்றியூரில் உள்ளது இன்றைக்கு சிறப்புற்று விளங்கும் முருகப்பா நிறுவனங்களின் முதல் வித்து கார்பெண்டம் யூனிவர்சல் இங்கே உப்புத்தாள்களும், தொழிற்சாலை இயந்திரங்களில் பயன் படும் சானைக்கல், உருளைகளும் தயாரிக்கப்படுகின்றது. ஒசூரிலும் இதற்கொரு தொழிற்சாலை உள்ளது.

**டி. ஐ டயமண்ட் செயின்**

இங்கே முக்கிய கச்சாப்பொருள் இரும்புச் சங்கிலிகள் இங்கே சைக்கிள் செயின், மோட்டர் சைக்கிள், மொபெட் செயின் தொழிற் சாலைகளுக்கு வேண்டிய செயின்களும் உருவாக்கப்படுகின்றது.

**டி. ஐ. மில்லர்**

ஆறு வோல்ட் டைனமோ சைக்கிள் விளக்குகள் நான்குலட்சம் பன்னிரண்டு வோல்ட் விளக்குகள் 1½ லட்சமும் ஆண்டு ஒன்றுக்கு தயார்செய்யப்படுகின்றது.

## டி. ஐ. சைக்கிள்

இவர்களின் தயாரிப்பான சைக்கிள், ஹெர்குலிஸ் பி.எஸ்.ஏ. சாம்ப் எஸ். எல். ஆர், ரகஸ்போர்ட்ஸ் சைக்கிள் இந்த நிறுவன சைக்கிள்கள், ஜெர்மனி, இலங்கை, மெக்சிகோ, ஆப்பிரிக்கா நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. ஒரு நாளைக்கு சுமார் 4000 சைக்கிள்கள் வீதம் சுமார் பத்து இலட்சம் சைக்கிள்கள் ஆண்டு ஒன்றில் உற்பத்தியாகின்றது.

## டியூப் பிராடக்ட்ஸ் ஆப் இந்தியா

இங்கே 1600 ஊழியாகள் மூன்று ஷிப்டுகளில் பணிபுரிகின் றனர். சூட்டு இழை (ஹாட்ரோல்ட்] பட்டைகள், குளிரிழை (கோல்ட் ரோல்ட்) பட்டைகளாக மாற்றப்படுகின்றது. தகட்டை அடிப்படை-யாகக் கொண்ட குழாய்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஒரே சுருள் 20-25 டன் எடையுள்ள ராட்சத உருளைகளாக வருகின்றது. அது சிறிதாக்கப்பட்டு குழாய் ஆகின்றது. சதுர வடிவாய்க் குழாய் களும் தயாராகின்றது இங்கே 4மில்கள் உள்ளன, வருடத்திற்கு 45,000 டன் தகடாகவும், 40,000 டன் குழாயாகவும் தயாரிக்க கூடிய திறன் உள்ளது. 33 KVA சப்ஸ்டேன் இங்கே உள்ளது. இங்கே மின்சாரத் தேவை அதிகம் ஒன்றேகால் லட்சம் யூனிட்மின்சாரம் தயா-ரிக்கும் ஜெனரேடர் இங்கே உள்ளது. இரட்டைச் சுவரோடு செம்பு பூச்சுடன் கூடிய மற்றெருவகை குழாய்களையும் முருகப்ப குரூப் தயார் செய்கின்றது. குசராத் மாநிலம் பரோடவில் இயங்கும் பண்டி டியூ பிங்க்ஸ் நிறுவனம் இரட்டைச் சுவரோடு கூடிய குழாய்களை தயார்செய்கின்றது.

## டி. ஐ. அன்ட எம் லிமிடெட்

வெளிநாடுகள் பலவற்றுக்கும் உயர்தர துணிவகைகளையும் கையால் நெய்த உயர்ரக கம்பளங்களையும் ஏற்றுமதி செய்கின்றது

## கோரமண்டல் இஞ்சினியரிங் கம்பெனி

பிரமாண்டமான கட்டிடங்கள், நடுத்தரமக்களின் குடியிருப் புக்காக பல மாடிக் கட்டிடங்கள், கட்டுவதில் முன்னோடியாக உள்ளது கோரமண்டல் நிறுவனம்.

## சோழ மண்டலம் இன்வெஸ்ட்மெண்ட் நிறுவனம்

இந் நிறுவனம் 1978 ல் தொடங்கப்பட்டது லீசிங்ஹையர்பர்ச் சேஸ் துறைகளில் இந்நிறுவனம் புகழ் பெற்று விளங்குகின்றது அயல் நாட்டு வங்கியான ஸ்டாண்டர்ட், சார்ட்டர்ட் வங்கி இதில் 28 சதவிகிதம் மூலதனம் வைத்துள்ளது.

## முருகப்பா எலெக்ட்ரானிக்ஸ்

இந்த அமைப்பு 1984ல் தொடங்கப்பட்டது. வீடியோ டேப்புகள் தயார் செய்கின்றது. காசெட் டேப்புகளை மெல்ட்ராக் என்ற பெயரில் விற்பனை செய்கின்றது.

## பாரி நிறுவனம்

பாரி நிறுவனம், சாக்லேட், பீங்கான் பொருட்கள் இஞ்சினியரிங் சாதனங்கள், கொரமண்டல உரங்கள் மருத்துவ ஆராயச்சிக்கான உபகரணங்கள் ஆகியவற்றை பாரி அன் கோ தயார் செய்கின்றது. முருகப்பச் செட்டியார் ஆராய்ச்சி மையம் ஏ.எம் எம். கிராமவளர்ச்சி அமைப்பு ஆகியவை முருகப்பா நிறுவனங்களுக்கு பெருமை தேடித் தருகின்றது.

---

# ஆருடம்

P. சங்கர் 115, சின்னக்கடைத் தெரு, மதுரை–625 001.

1?–10–1991 to 16–11–1991

## மேஷம் :

பிரயாணங்கள் தவிர்க்கவும் நண்பர்கள் பிரிவு உத்யோக இட பெயர்ச்சி உடல் நல குறைவு மாத பிற்பகுதியில் நலம் உண்டு சிலருக்கு புதிய கடன் போன்றவை ஏற்படலாம்.

## ரிஷபம் :

பூர்வீக சொத்துக்கள் போன்ற மன குறைவு வழக்குகள் ஏற்படலாம். எதிலும் கவனம் தேவை குழந்தைகள் சம்மந்தபட்ட பிரச்சனை மூலம் கவலை ஏற்படும் சுபகாரிய தடை.

## மிதுனம் :

அஷ்டமசனி இருந்த போதிலும் காரியங்கள் தாமதத்தின் பேரில் நடக்கும் திருமணம் பிராயணம் மூலம் ஆதாயம் ஏற்படும். சுக்கிர திசை நடப்பவர்கள் பரிகாரம் செய்து கொள்ளவும்.

## கடகம் :

பொருளாதார நெருக்கடி குடும்பத்தில் மனகவலை திடீர் இடமாற்றம் சிலருக்கு உடல் நிலை ஆப்ரேசன் போன்றவை ஏற்படலாம் வாகன சிறு விபத்துகள் ஏற்படலாம்.

## சிம்மம் :

சுப செய்திகள் எதிர்பாரத திடீர் தனப்பிராப்தி குழந்தைகள் சம்மந்தபட்ட முன்னேற்ற செய்திகள் மாத பிற்பகுதியில் கவனம் தேவை உடல் நலம் பாதிக்கப்படும்.

## கன்னி :

கொடுக்கல் வாங்கல் நிதானம் தேவை உறவினர் பிரிவு பகை

போன்ற சிக்கல் ஏற்படும் சிலருக்கு பூர்வீக சொத்துக்கள் பிரச்சனைகள் வரலாம் குடும்பத்தில் மன அமைதி குறைவு

## துலாம் :

எதிலும் காரிய ஜெயம் பிரயாணம் மூலம் ஆதாயம் பெரியோர் நட்பு ஏற்படும் ஒரு சிலருக்கு உத்யோக மாற்றம் ஏற்படலாம் சூரிய திசை நடப்பவர்கள் சாந்தி செய்து கொள்வது நலம்

## விருச்சிகம் :

மாத பிற்பகுதியில் பலன்கள், படிபடியாக நலம் உண்டாகும் சில குழப்பம் இருந்த போதிலும் திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகள் ஏற்படும் கேது திசை நடப்பவர்கள் சாந்தி செய்து கொள்ளாம்

## தனுசு :

உத்யோகஸ்தர்கள் எதிலும் நிதானம் தேவை அலைச்சல் அதிகம் ஏற்படும் பூமி சம்மந்தபட்ட பிரச்சனை மாத பிற்பகுதியில் நலம் உண்டாகும் புதிய முயற்ச்சிகள் காரியதாமதம் ஆகும் சுக்கிர திசை நடப்பவர்கள் சாந்தி செய்து கொள்வது நலம்

## மகரம் :

வீண்பிரச்சனைகளை சந்திக்க வேண்டி வரும் பிரயாணங்கள் மூலம் உத்யோகஸ்தர் வியாபாரிகள் நஷ்டம் அடைவர்கள் கவனம் சிலருக்கு வழக்குகள் போன்றவை ஏற்படும்

## கும்பம் :

தீர்த்த யாத்திரை, சுப நிகழ்ச்சிகள் எதிர்பாராத உதவிகள் ஏற்படும் நண்பர்கள் பிரிவினை 'கூட்டு தொழில் பார்பவர்கள் கவனம் தேவை சனி பகவானுக்கு அர்ச்சனை செய்து வரவும்

## மீனம் :

பெரியோர் பகை ஏற்படும் இடபெயர்ச்சிகள் ஏற்படலாம். சிலருக்கு கடன் தொல்லைஏற்படும் எதிலும் ஜாமின் போன்றவை கூடாது சூரிய வழிபாடு நலம் தரும்'

சுபம்

# வெடிகள்—தயாரிக்கும் முறைகள்

## தீபாவளி

**வெடிகள் :** தீபாவளியென்றாலே குழந்தைகளுக்கு கொண்டாட்டம் காரணம். புது புது ஆடைகள், பட் பட் வெடிகள் கிடைப்பதே ஆகும். இன்று உலகம் விரைந்து வளர்ந்து வருகின்றது. ஆமாம் என்று தலையாட்டும் காலம் மறைந்து வருகின்றது. ஏன், எப்படி, எவ்வாறு கேள்வி எழுந்து அதற்கு விடையையும் காண முயன்று வருகின்றது. எதையும் தெரிந்து கொள்ள இப்பொழுதுள்ள தலைமுறை விரும்புகின்றது. இங்கே சில வெடிகள் தயாரிக்கும் முறையை கீழே தந்துள்ளேன்.

**கம்பி மத்தாப்பு**

**தேவையான பொருட்கள் :** அலுமினியப்பவுடர், கந்தகம், பச்சை உப்பு, செம்பு முகாமிட்ட கம்பி ஆகிய இரசயானப் பொருட்கள்.

**தயாரிக்கும் முறை :** மேற்கண்ட இரசயானப் பொருட்களையெல்லாம் சேர்த்து ஒரு குழம்பு போல் செய்துக்கொள்வார்கள் இந்தக் கலவை தண்ணீராகவும் இல்லாமல் கெட்டியாகவும் இல்லாமல் கம்பிகளில் ஒட்டிக் கொள்ளும் வகையில் ஒரு வித பதத்தில் இருக்கும் கம்பிகளை தேவைக்கு எற்ப வெட்டியெடுத்து, ஒரு வித பிரேம்களில் பொருத்தி இந்த இரசயானக் கலவையில் தோய்த்து எடுத்து காய வைப்பார்கள். வெயிலில் காய்ந்த பின் நமக்கு கிடைப்பது கம்பி மத்தாப்பு.

**கேப் வெடி :** நமது நாட்டில் சிவகாசியில் மட்டும் தான் கேப் தயாரிக்கின்றார்கள். கேப் தயாரிக்கும் இயந்திரத்தின் பெயர் டாட் பிரிண்டிங் மிஷன் குறிப்பிடத்தக்க விசேமான சிவப்புக் காகிதத்தின் மீது இரசயான மருந்தை புள்ளி புள்ளியாக அச்சிட்டு அதற்கு மேல். இன்னொரு சிவப்புக் காகிதத்தை ஒட்டுவார்கள். ஒவ்வொரு புள்ளியும் தனித் தனியாகக் காகிதங்களின் நடுவே சிக்கி விடும். பின்பு இவைகள் வில்லை வில்லைகளாககத் கத்தரிக்கப்படும்.

**சர வெடி :** திரியை சாதாரண நூலில் ஒரு மருந்துக் கலவையில் நனைத்து காய வைக்கின்றார்கள். பிறகு இதன் மீது காகிதத்தைச் சுற்றி தேவையான அளவுகளில் வெட்டி எடுத்துக் கொள்வார்கள். பின் நீண்ட காகித அட்டைக் குழாய்களில் அலுமினியப் பவுடர், பச்சை உப்பு வெடி உப்பு, கந்தகம் ஆகிய மருந்துக் கலவையை நிரப்பி அவைகளை வேண்டிய நீளத்திற்கு வெட்டுவார்கள். ஒரு பக்கத்தை அடைத்து விட்டு மற்றொரு பக்கத்தில் திரியை பொருத்து-

வார்கள். பின் வெளிப்பக்கம் வண்ணக் காகிதத்தை ஒட்டி காய வைப்பார்கள். இது தான் வெடி. இதையே பூச்சரம் பின்னினால் அது சர வெடியாகும்.

**தரைச் சக்கரம் :** நீண்ட காகித குழாய்களில் தேவையான கலவை மருந்தை நிரப்பி, வட்டமாகச் சுற்றி, அதற்காகச் செய்யப்பட்ட பிரேம்களில் இட்டு அடுக்குவார்கள். பின் இதன் மேல் ஓர் மரக்குழவி கொண்டு உருட்டி சமம் செய்வாரகள். இப்போது எல்லா வட்டங்களும் சமமாக இருக்கும், பின் தரையில் சுற்ற அட்டையால் செய்யப்பட்ட குமிழியையும் இணைப்பார்கள். ஒட்டி விட்டால் தரைச் சக்கரம் தயார். இப்படி குமிழ்களை ஒட்டாமல் கம்பிகளை வளைத்து தனியாக வைத்தால் அது விஷ்ணு சக்கரம்.

**அணுகுண்டு வெடி :** மருந்துக் கலவையை சிறு அட்டைப் பெட்டிகளில் கட்டி விட்டு நன்றாகச் சணலால் இறுகக் கட்டுவார்கள் சணலின் இறுக்கமும் சுற்றும் கூடக் கூட அணுகுண்டின் சக்தி கூடும். அணு குண்டின் திரியில் தீ வைத்ததும் மருந்துக் கலவை உள்ளே புகை வெளியே வரத் துடிகின்றது. இறுக்கமான காகிதத்தையும் சணலையும் டமாலெனப் பிரித்து கொண்டு புகை வெளி வருகின்றது. அணுகுண்டு பயங்கரச் சத்தத்துடன் வெடிக்கின்றது.

சிவகாசி நடராசன்

# நகரத்தார் வழிபாடும் முருகப்பெருமானும்

உமையாள் முத்து

நகரத்தார் பெருமக்கள் எங்கெங்கு வாழ்ந்தார்களோ அங்கெல்லாம் முருகனுக்குக் கோவில்கள் உண்டு. முருகப் பெருமான் செட்டி நாட்டு மக்கள் வழிபடும் தெய்வம். சிங்கப்பூரில், இலங்கையில் லண்டனில், மலேசியாவில் பர்மாவில் முருக வழிபாடு இன்றும் தொடர்ந்து வருகின்றது. தமிழகத்தில் முருகன் அருள்பாலிக்கும் தலங்கள் ஆறாகும். அந்த ஆறுபடை வீடுகள் திருப்பரங்குன்றம் திருச்செந்தூர் திருவாவினங்குடி, திருவேரகம் குன்று தோறுடல் என்பவையாகும். முருகனைப்பரப்பினால் முருகனைத்துதித்தால் உய்வடையலாம் என்பதை திருமுருகாற்றுப் படை எழுதிய நக்கீரர் பாம்பன் சுவாமிகள் அகத்தியர், வண்ண சரபம் தண்டபாணி சுவாமிகள், தேவராய சுவாமிகள், அருணகிரிநாதர் இன்றும் நம்மிடையே வாழும் கிருபானந்த வாரியார் சுவாமிகள் இவர்களுடைய வாலாறு விளக்குகின்றது. இந்த வயதிலும் கூட வாரியார் சுவாமிகள் குறைந்தது 2, 3மணி நேரம் சொற்பொழிவு செய்கின்றார். நோய் நொடி இன்று வாழ்கின்றார் என்றால் அதற்குக் காரணம் அவருடைய முருகபக்தியேயாகும்.

மதுரை தமிழ்ச் சங்கத்தில் ஆலவாய் அண்ணலுடன் சொற்போரிட்டு வெப்ப நோய் பெற்று அது தீரக்கைலை செல்லும் வழியில் பூதத்திடம் சிறைபடுகின்றார். நக்கீரார் திருமுருகாற்றுப்படை பாட முருகன் வந்து நக்கீரரை சிறைமீட்டார்

குமரக் கடவுளுக்கு முக்கிய தினம் சுக்கிரவாரம் சோமவாரம் என்பன. கிருத்திகை விசாகம் என்னும் நட்சத்திரமும், சஷ்டி பௌர்ணமியென்னும் திதியாகும் ஐப்பசி மாதம் சுக்கிலபக்ஷம் பிரதமை முதல் சஷ்டி வரையில் விரதமிருந்து சஷ்டி விரதத்தை கடைபிடித்தால் சகல பாக்கியங்களும் உண்டாகும்.

நகரத்தார்கள் என்றும் சைவப்பணி, அறப்பணி, தமிழ்ப்பணி என்று தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டவர்கள். பினாங்கில் சிங்கப்பூரில் நகரத்தரர்கள் கொண்டாடும் தைப்பூச விழாவில் இன்றும் கூட வேறு சில இனத்தவர்கள், நாட்டாகள்

கலந்து கொண்டு காவடி எடுப்பதும் வேண்டுதல் செய்து கொள்வது உண்டு. ஆண்டு தோறும் முருகப் பெருமானை வழிபட்டுக் கொண்டு தேவகோட்டை, காரைக்குடி, செட்டி நாட்டு பகுதிகளிலிருந்து கால் நடையாக மக்கள் பழனித் திருத்தலம் நோக்கிச் சென்று காவடிகள் செலுத்துதல், வ ழி ப டு த ல் இவையெல்லாம் நமக்கு முருகனிடம் இருக்கும் ஈடுபாட்டைக் கு றி ப் ப தா கு ம். விழிக்குத் துணையாக மெய்ம்மை குன்றுத மொழிக்குத் துணையாக இருக்கின்ற கந்தனைக், கடம்பனைக் குகனை, சரவணனே, சண்முகனை, சேயோனை வழிபட்டு சகல சௌபாக்கியமும் பெறுவோமாக!

---

நகரத்தார் ஏடுகளில் கட்டுரைகள் பல எழுதுபவரும் சமுதாய நலத்தில் ஆர்வமிக்க வருமான ரெயில் மெ மு. பழநியப்பன் அவர்களின் தந்தையார் ரயில் முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் 15-10-91 இலங்கை கொட்டக் கலையில் இ ய ற் கை எய்தினார். அவரது குடும்பத்தாருக்கு எமது அ னு தா ப த் தை தெரிவித்துக் கொள்கின்றோம்.

---

கலந்து கொண்டு காவடி எடுப்பதும் வேண்டுதல் செய்து கொள்வது உண்டு. ஆண்டு தோறும் முருகப் பெருமானை வழிபட்டுக் கொண்டு தேவகோட்டை, காரைக்குடி, செட்டி நாட்டு பகுதிகளிலிருந்து கால் நடையாக மக்கள் பழனித் திருத்தலம் நோக்கிச் சென்று காவடிகள் செலுத்துதல், வழிபடுதல் இவையெல்லாம் நமக்கு முருகனிடம் இருக்கும் ஈடுபாட்டைக் குறிப்பதாகும். விழிக்குத் துணையாக மெய்ம்மை குன்றுத மொழிக்குத் துணையாக இருக்கின்ற கந்தனைக், கடம்பனைக் குகனை, சரவணனை, சண்முகனை, சேயோனை வழிபட்டு சகல செளபாக்கியமும் பெறுவோமாக!

---



---

## இயற்கை எய்தினார்

நகரத்தார் ஏடுகளில் கட்டுரைகள் பல எழுதுபவரும் சமுதாய நலத்தில் ஆர்வமிக்க வருமான ரெயில் மெ மு. பழநியப்பன் அவர்களின் தந்தையார் ரயில் முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் 15-10-91 இலங்கை கொட்டக் கலையில் இயற்கை எய்தினார் அவரது குடும்பத்தாருக்கு எமது அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கின்றோம்.

---

## மதுரை நகரத்தார் விஜயதசமி விழாக்குழு

28, டவுன் ஹால் ரோடு, மதுரை 1. போன் : 23829

நவராத்திரி விழாவின் நிறைவு நாளான விஜயதசமி அன்று மதுரை விளக்குத்தூண் பகுதியில் முருகப் பெருமானை குதிரை வாகனத்தில் வலம் வரச் செய்து மண்டகப்படி அமைத்து அம்பு போடச் செய்திட திட்டமிடப்பட்டுள்ளது அடுத்த ஆண்டு இந்த விழா சிறப்பாக நடத்தப்படும். இக்குழுவின் தலைவர் அரு சம்பத் செட்டியார் அவர்கள் துணைத் தலைவர்கள் SP. அண்ணாமலை அவர்கள் Rm. M. அண்ணாமலை அவர்கள் M. கண்ணப்பன் அவர்கள் செயலாளர்கள் திருவாளர்கள் Rm. P. Rm. P. முத்தையா செட்டியார் அவர்கள் R. சொக்கலிங்கம் அவர்கள் பொருளாளர் CN. ராமநாதன் அவர்கள் இவ் ஆண்டும் 18.10-91 அன்று மதுரை நகரத்தார் விஜயதசமி விழா குழுவினரால் சுவாமி அம்பு போடும் விழா சிறப்பாக நடைபெற்றது.

---

### பேருந்துக் கட்டணம் உயர்வு

16-10-91 முதல் தமிழகத்தில் பேருந்துக் கட்டணம் உயர்த்தப் பட்டுள்ளது. குறைந்த பட்ச நகரப் பேருந்துக் கட்டணம் 50 காசி-லிருந்து 70 காசாக உயருகின்றது புறநகர் பேருந்துகளில் குறைந்த பட்ச கட்டணம் (8 கி.மீட்டருக்கு) ஒரு ரூபாய் ஆகும் ஒரு கிலோ மீட்டருக்கு 9½ காசு என்று இது வரை இருந்தது. 16 10-91 முதல் 12½ காசாக உயரும். மதுரையிலிருந்து சென்னைக்கு இது வரை இருந்த கட்டணம் ரூ 47/- ஆகும். இனிமேல் புதிய கட்டணம் ரூ 55–80/- ஆகும்.

---

18-10-91 அன்று தமிழகத்தின் 22வது மாவட்டமாக நாகை காயிதே மில்லத் மாவட்டத்தை தமிழ்நாடு முதல்வர் ஜெயலலிதா அவர்கள் தொடங்கி வைத்தார்கள் இதன்பரப்பு 4600 சதுர கிலோ மீட்டர். இவ்மாவட்டத்தில் 11 வட்டங்கள் 19 ஊராட்சி ஒன்றியங்கள் 5 நகராட்சிகள் அடங்கியுள்ளது. இந்த மாவட்டத்தின் முதல் ஆட்சித்தலைவர் திரு கந்தன் அவர்கள்

## "வாசகர்கள் போட்டி - ஆவணி இதழ் : 1991"

ஆவணி '1991' இதழில் வாசகர்கள் பரிசுப் போட்டியை அறிவித்திருந்தேன். அதற்குரிய பதிலை மிகவும் தாமதமாக ஆர்வமுள்ள வாசகர்கள் P. ராமனுதன் மதுரை. AN. செந்தாமரை காரைக்குடி சண்முகம், சிவகங்கை V. பத்மனநாபன், கோவை, கா. இராமநாதன் அம்பத்தூர் S. சொக்கலிங்கம் தி.நகர் சென்னை ஆகியோர் பதில்களை அனுப்பியிருந்தார்கள். அவர்கள் பதிலில் இரண்டு மூன்று தான் சரியாக இருந்தன. எனவே இவருக்கும் பரிசு வழங்க முடியவில்லை. அவர்கள் ஆர்வத்திற்கு எமது பாராட்டு-கள் சரியான பதில்களை கீழே தந்துள்ளேன்.

### விடைகள்

1) காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகம் 1985ம் ஆண்டில் தொடங்கப்பட்டது.

2) மாசி என்பவரின் இயற்பெயர் மாணிக்கவாசகம் செட்டியார் அவர்கள்.

3) பட்டினத்தாருக்கு பெற்ருேர் இட்ட பெயர் சுவேதாரண்யர்.

4) சண்டிகேசுவரர் ஒரே கல்லினால் தனிக் கோயில் கொண்டுள்ள கோயில் வயிரவன் கோயில்.

5) வேந்தன்பட்டி மீனாட்சி சொக்கலிங்கம் ஆலயத்தில் உள்ள நந்தி புதுக்கோட்டை அருகிலுள்ள கொடும்பாளுரிலிருந்து கொண்டு வரப்பட்டது.

6) சென்னை மாநகரத்தின் முதல் மாநகரத் தந்தை அரசர் முத்தையா செட்டியார் அவர்கள்.

# நமது செய்திகள்

**ஒக்கூர் சிக அரு. சோம. இராமநாதன் செட்டியார் அவர்கள்**

மதுரை தமிழ் இசைச் சங்கத் தலைவராக ஒக்கூர் சிக.அரு சோம இராமநாதன் செட்டியார் அவர்கள் ஒரு மனதாக தேர்வு செய்யப் பட்டுள்ளார். இவர் தமிழ இசைக் சங்கத்தில் பல ஆண்டுகள் செயலாளர்களில் ஒருவராக செயல்பட்டார்.

**கண்டவராயன்பட்டி :** கண்டவராயன் பட்டியிலுள்ள கிளை நூலகத் திற்கு நூலகர் புரவலர் என்ற திட்டத்தின் கீழ் கண்டவராயன் பட்டியைச் சேர்ந்த டாக்டர் எ. டி. தியாகராசன் ரூ. 1000/– நன்கொடை வழங்கி நூலகர் புரவலர் என்ற சிறப்பைப் பெற்றுள் ளனர். இத்திட்டத்தில் கீழ் கண்டவராயன்பட்டி நகரத்தார் பல்ர் ரூ 1000/- வழங்கி நூலகப் புரவலர் பட்டத்தை பெற்றுள்ளனர்.

அ வல்லி நாட்டான்

**காரைக்குடி :** செக்காலை யில் நம்மவர்களால் கட்டப்பட்டுள்ள அருள்மிகு பாலாம்பிகை சமேத வைத்தியநாத சுவாமி திருக்கோ-விலின் திருக்குட நன்னீராட்டுவிழா 12-9-91 அன்று சிறப்பாக நடைபெற்றது..

**பிள்ளையார்பட்டி :** 3–9–91 முதல் 12-9-91 வரையில் பிள்ளை யார் பட்டியில் அருள்மிகு கற்பக விநாயகர் கோவிலின் மகாசதுர்த்தி விழா சிறப்பாக நடைபெற்றது.

**துலாவூர்,** 24-9-91 அன்று துலாவூரில் துலாவூர் ஆதீனத்தின் குரு தவத்திரு பெருமைக்குரிய நிரமப அழகிய தேசிக் பரமாச்சாரிய சுவாமிகளின் மகா குருபூஜை சிறப்பாக நடந்தது. பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தனார் வரவேற்புரை வழங்கினார் அமரர் காரைக்குடி பழ. செ. மு. அழகம்மை ஆச்சியின் திருஉருவப் படத்தை வேந்தன்பட்டி ஊராட்சி முன்னாள் தலைவர் பழ. குழந்தையன் செட்டியார் திறந்து வைத்தார். இவ்விழாவில் ஆத்தங்குடி பெரியவர் அரு. கா. காய்ப் செட்டியார் அவர்களுக்கு துலாவூர் ஆதினகர்த்தர் பெருமைக்குரிய ஞானபிரகாச தேசிக சுவரமிகள் அறமனச் செம்மல் என்ற பட்டத்தை வழங்கி பாராட்டினார். இரவு பூசைக்குப்பின் துலாவூர் ஆதீனத்தலைவர் கொலு வீற்றிருந்து சிறப்பித்தார்.

**பாகனேரி :** பாகனேரியில் 29.8-91 அன்று பாகனேரி பெரி. அழ. மு. மு. அண்ணாமலை செட்டியார் அவர்கள் செல்வி சரசுவதிக்கும் காரைக்குடி வீர. ராம. பெரி. பெரியகருப்பன் செட்டியார் அவர்கள் செல்வன் அழகப்பனுக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

**வலையபட்டி :** வலையபட்டி நகர மடத்தில் வெள்ளியில் கழுத்து உரு செய்து தங்க முலாமிட்டு வைக்கப்பட்டுள்ளது. தேவையானவர்கள் அதற்குரிய சிறு கட்டணத்தை செலுத்தி பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அறிவிக்கப்பட்டுள்ளது நகர மடத்திற்கு அன்பளிப்பாக செய்து கொடுத்திருப்பவர் பழ. ஜெயங்கொண்டான் செட்டியார்.

**காவேரிபூம்பட்டிணம் :** காவிரிப்பூம்பட்டிணத்தில் திருச்சாய்க்காடு என்னும் சாயாவனத்தில் 25-12-91 முதல் 29 12-91 வரை திருச்சாயக்காடுடையார் திருக்கோவிலில் இல்லையே என்னாத இயற்பகை நாயனார் விழா சிறப்பாக நடைபெறவுள்ளது.

**மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் நவராத்திரி கலை விழா**

மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் நவராத்திரி கலை விழா 8-10-91 அன்று தொடங்கியது. 8-10-91 முதல் 18-10-91 வரையில் தினமும் இரவில் அம்மனுக்கு சிறப்பு அலங்காரங்களும் பூசைகளும் நடைபெற்றது. கலை விழாவிற்கான ஏற்பாடுகளை மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலய அறங்காவலர் குழுத் தலைவர் ராம. ராமனாதன் செட்டியார் அவர்கள் சிறப்பாக செய் திருந்தார் பத்திரிகைகளை மதிக்கும் பண்புடையவராக அறங்காவலர் குழுத்தலைவர் ராம. ராமனாதன் செட்டியார் அவர்கள் உள்ளார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

**தேவகோட்டை**

தேவகோட்டை நகரத்தார் இளைஞர் முன்னேற்ற சங்கத்தின் ஆண்டு மகாசபை கூட்டம் 8-9-91 ஞாயிறு மாலை மந்திர உபதேச கொட்டகையில் நடைபெற்றது. தலைவராக A. L. முருகப்பன் அவர்கள் துணைத்தலைவர்களாக D. சாமிநாதன். S. மோகன், M.S மீனாட்சிசுந்தரம், செயலாளராக K. சரவண நாராயணன் அவர்களும் துணைச் செயலாளராக CV. ராமனாதன் அவர்களும், பொருளாளராக V.R. சுயம்பிரகாசம் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். செயற்குழு உறுப்பினர்களாக 12பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**மணிவாசகர் நூலகம்**

மணிவாசகர் நூலகம் சார்பில் பேராசிரியர் ச. மெய்யப்பனார் 28-9-91 அன்று கானாடு காத்தானில் நடைபெற்ற டாக்டர். மு. அ. மு. ராமசாமி செட்டியார் சிகப்பி ஆச்சி அவர்கள் மணிவிழாவில் ''மணிவிழா மாலை'' என்ற தலைப்பில் 32பக்க நூலை வெளியிட்டார் இம்மணிவிழா மாலையில் அரசர் குடும்பச் செய்திகள், வெற்றிச் சிந்தனைகள் மற்றும் பல செய்திகள் உள்ளன.

---

# புரட்டாசி இதழ் 1991 — "கன்னியருக்கு வாழ்வு கொடுங்கள்" தலையங்கத்திற்கு விளக்கம்

கன்னியருக்கு வாழ்வு கொடுங்கள் என்ற தலைப்பில் புரட்டாசி இதழில் நான் எழுதியுள்ள கருத்திற்கு மறுப்பு தெரிவித்து S. மீனாட்சி அவர்கள் அரியலூர் S. அமுதா அவர்கள் மதுரை L. மீனாள் அம்பத்தூர், கடிதம் எழுதியுள்ளார்கள். சிலர் நேரிடையாகவும் வந்து அந்தக் கருத்துக்கு மறுப்பு தெரிவித்துள்ளார்கள். சிலர் கண்டித்தும் எழுதியுள்ளார்கள். யாரையும் புண்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன் நான் எழுதவில்லை. நான் கேள்விப்பட்ட செய்தியை அடிப்படையாக கொண்டே இக்கருத்தை எழுதியுள்ளேன். பெண்கள் தனித்து வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்பதில் நான் ஆர்வமிக்கவன் என் இதழின் துணை ஆசிரியராக ஒரு பெண் தான் உள்ளார். அவரின் பெயரை விரைவில் அறிவிக்க உள்ளேன். ஆகவே நான் பெண்களை மதிப்பவன். பெண் இன முன்னேற்றத்திற்காக பல கட்டுரைகளை என் இதழில் வெளியிட்டுள்ளேன். "கன்னியருக்கு வாழ்வு கொடுங்கள்" என்ற தலைப்பில் புரட்டாசி இதழில் நான் கூறியுள்ள கருத்துக்கள் ஏற்கத்தக்கதல்ல என்று குறிப்பிட்டுள்ளீர்கள். உங்கள் கருத்துக்களை மதிக்கின்றேன். நீங்கள் மறுப்பு தெரிவித்து கண்டித்து எழுதியுள்ள கடிதங்களை அடுத்து இதழில் வெளியிடுகின்றேன்.

சுப. செந்தமிழன்

---

## அக்டோபர் செய்திகள் — 1991

1. திருப்பதி ஏழுமலையான் கோவிலுக்கு ரூபாய் ஒரு கோடி செலவில் தங்கரதம் உருவாகி வருகின்றது.

2. 1947-ல் அமெரிக்காவில் புகழ்பெற்ற ஜீன்ஸ் உடைகள் 1970-ல் நமது நாட்டில் புகழ்பெற்றது. நமது நாட்டில் ஜீன்ஸ் துணிகள் ஒரு நாளைக்கு 30 ஆயிரம் மீட்டர்கள் தயாரிக்கப்படுகின்றது.

3. கும்பகோணத்தில் வைக்கிங் பனியன் தயார் ஆகின்றது. இந்த நிறுவனம் நாற்பதுக்கு மேற்பட்ட ரகங்களில் பனியன்களை தயார் செய்கின்றது. டைலரிங் சிறிதளவு தெரிந்திருந்தால் வாரத்துக்கு ரூ. 400/– சம்பாதிக்கலாம்.

4. சப்பானில் சேலை அரிசி என்ற புதிய அரிசி கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

# "சிறந்த நகரத்தார் இளைஞர் விருது"
# ஆர். சொக்கலிங்கத்திற்கு

2-10-91 அன்று நடைபெற்ற நகரத்தார் புத்தகவங்கி 3ம் ஆண்டு விழா மற்றும் இளைஞர் தின விழாவில் மதுரை நகரத்தார் இளைஞர் சங்க தலைவர் ஆர். சொக்கலிங்கத்திற்கு "சிறந்த நகரத்தார் இளைஞர்" விருது வழங்கப்பட்டது. அருணகிரி வரவேற்றார் விழாவிற்கு செம்பனூர் மாணிக்கம் செட்டியார் தலைமைதாங்க தேவகோட்டை AL. முருகப்பன் குத்துவிளக்கு ஏற்றிவைத்தார். விழாக்குழு உறுப்பினர்களுக்கு சம்பத் செட்டியார் நினைவுப் பரிசுகளை வழங்கினார் ஆர் சொக்கலிங்கம் பற்றிய புத்தகத்தை ச. கம்பராமன் வெளியிடதிரைப்படவிநியோகஸ்தர். சங்கத்தலைவர் என். எஸ். சொக்கலிங்கம் பெற்றுக் கொண்டார். முன்னாள் தக்கார் வி. என். சிதம்பரம் சிறந்த இளைஞர் விருதினை வழங்கி வாழ்த்துரை நல்கினார். செயலர் ஜி. உடையப்பன் மாலை அணிவித்து கௌரவித்தார் மேலும் எம். சி. என். மாணிக்கம், கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம் மக்கள் கவிஞர் அரு நாகப்பன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார். விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்ற அனைவருக்கும் அழகப்பா பல்கலைக்கழக துணை வேந்தர் டாக்டர். நாகப்பன் பரிசு வழங்கி சிறப்புரை ஆற்றினார் இறுதியில் குமாரி S. சுஜாதா R. பிரியா ஆகியோரின் பரதநாட்டியம் நடைபெற்றது. புத்தகவங்கி தலைவர் சண்முகசுந்தரம் நன்றி கூறினார்.

விழாவிற்கான விரிவான ஏற்பாடுகளை வழக்கறிஞர் பழ. இராமசாமி. ஜி. உடையப்பன், ச. கம்பராமன், சுரேஷ், லெட்சுமணன், ராஜா பேராசிரியர் பழனியப்பன் ஆகியோர் சிறப்பாக செய்திருந்தனர்.